# முன்னுரை

நண்பர்களே,

சித்தர்களின் அரிய நூல்களை மின் நூலாக தொகுத்து மின் ஊடகத்தில் பகிர்ந்திடும் தொடர் முயற்சியில், பன்னிரெண்டாவது படைப்பாக போகர் அருளிய "வாலை ஞான பூஜாவிதி" என்கிற நூலை மின் நூலாக்கி இருக்கிறேன்.

சித்தர் பெருமக்களின் வரிசையில் சிறப்பான இடத்தில் வைத்துப் போற்றப் படும் போகநாதர் அருளிய இந்த நூலானது வாலைத் தெய்வத்தை வணங்கிடும் வழி வகைகளை விளக்கிக் கூறுகிறது. சித்தர் பெருமக்கள் அனைவரும் வழிபட்ட இந்த வாலைத் தெய்வம் பத்து வயதுடைய சிறுமியின் அம்சம் என்பது பலருக்கும் தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

சித்தமெல்லாம் சிவமாய் திளைத்திருக்க ஆதி சக்தியின் அருளும்,ஆசியும் அவசியம் என்பதை சித்தர் பெருமக்கள் உணர்ந்திருந்தனர். அத்தகைய ஆதி சக்தியின் அம்சம்தான் இந்த வாலைத் தெய்வம். இந்த தெய்வத்தை வணங்கி இவளின் அருள் பெற்றவர்களே சித்த நிலைக்கு உயரமுடியும் என ஏராளமான குறிப்புகள் நமக்கு காணக் கிடைக்கின்றன.

போகர் இந்த நூலில் வாலைதெய்வதின் வழிபாட்டின் முக்கியத்துவத்தை பின் வருமாறு விளக்குகிறார்.

*"இந்தவிதத்திலே தேகத்திலே தெய்வம்*
*இருக்கையில் புத்திக்கறிக் கையினால்*
*சந்தோஷ வாலையைப் பாராமல் மனிதர்*
*சாகிறதேதடி வாலைப் பெண்ணே"*

நமது உடலில், உணர்வில் உறைந்திருக்கும் தெய்வமாகிய வாலையை அறியாமல் மனிதர்கள் தமது வாழ்நாளை வீணடித்து இறந்தும் விடுகிறார்கள் என்கிறார் போகர். இத்தனை சிறப்பு வாய்ந்த வாலையை சித்தர் பெருமக்கள் அகப்புற வழிகளில் பூசை செய்திருக்கின்றனர்.

இந்த நூலில் வாலை தெய்வத்தை வழிபடுவதற்குத் தேவையான யந்திர தயாரிப்பு முறை, அதற்கான மூல மந்திரங்கள் அவற்றின் பிரயோக முறைகள் என அனைத்தும் விரிவாக விளக்கப் பட்டிருக்கிறது. வாலை தெய்வத்தின் அருள் பெற விரும்புவோருக்கு இந்த நூல் ஒரு வரப்பிரசாதம் என்றால் அது மிகையில்லை.

தமிழ் அறிந்த அனைவரும் இந்த அரிய நூலின் விவரங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்கிற நோக்கில் மின் நூலாக தொகுத்திருக்கிறேன். இத்தகைய முயற்சிகளின் வெற்றி என்பது எத்தனை பேரைச் சென்று அடைகிறது என்பதில்தான் இருக்கிறது. எனவே தயவு செய்து இந்த மின் நூலினை பார்வையிடும் நண்பர்கள் அறிந்தவர், தெரிந்தவர் என்கிற பாகுபாடு இல்லாமல் ஆர்வம் உள்ள அனைவருடனும் பகிர்ந்து கொள்ள வேண்டுகிறேன்.

தொடரும் உங்களின் அன்பிற்கும், ஆதரவிற்கும், மேலான ஆலோசனைகளுக்கும் நன்றிகள் பல...

எனது மேலான குருவினை பணிந்து இந்த முயற்சியினை உங்கள் பார்வைக்கு வைக்கிறேன்.

என்றும் நட்புடன்,

தோழி..
www.siththarkal.com

தொடர்புக்கு..
siththarkal@gmail.com

## நூல்.

பாரப்பா வாலைதனை தியானஞ்செய்ய
	பாங்கான நவகோண மிட்டுசூழச்
சேரப்பா இருவளையம் வாசல்நாலு
	சிகாரமுதல் றீங்காரம் இட்டுநன்றாய்
காரப்பா கீழ்வாசல் கணபதியுங் கந்தன்
	கருணையுள்ள செயவீர பாகுதேவர்
ஆரப்பா அறைகள்முதல் கிழக்குதொட்டு
	அகாரமுடன் உகாரம்சவ் வகாரம்போடே.

சவ்வோடே ஓங்கிலீங் காரமிட்டுத்
	தடுத்துநின்ற மயேஸ்வரியை நடுவேவைத்து
செவ்வேதான் மும்மூலச் சூலம்போட்டுச்
	சிகாரமுடன் வகாரமதிற் சிறக்கப்போடு
லவ்யவ்வும் உகாரமடி கீழேயிட்டு
	லாலீலுவென்று முடிமேலே போட்டு
வவ்வோடே யிருபுறமக் கரமும்போட்டு
	வாலைதனை நடுவீட்டில் மதித்திடாயே.

மதித்திருந்த வாலையுட வலப்பாகத்தில்
	மயேசுவரனும் விந்துவதில் வளையம்போட்டு
விதித்திருந்த மூலஓங்கா ரந்தன்னை
	வீராக யிடபுறத்தே மேவிப்போட்டு
சதித்திருந்த வடுகனொடு துர்க்கைகாளி
	சாமுண்டி மாலினியும் வராகிதானும்
விதித்திருந்த உன்மனையும் புவனைதானும்
	வீராக வாசலிலே வைத்துப் போற்றே.

போற்றென்று ரெந்தைக்கு நந்தியீசர்
புகழாக இந்தமுறை யெனக்கு சொன்னார்
ஆற்றென்றும் கொங்கணர்க்கு யானும் சொன்னேன்
அப்படியே கண்டவர்க்கு அவர்தான் சொன்னார்
ஈற்றென்று பூரணத்தின் விசாலம் போலே
யியல்பாக சித்தரும் இப்படியே செய்வார்
காற்றென்று வாலைதனை நித்தம்நித்தம்
கருணைமற வாமல்நீ பூசைசெய்யே.

பூசையது செய்வதற்கு வாதஞ்சித்தி
பூண்டிருந்தால் காயசித்தி யோகசித்தி
ஆசையென்ற பேரின்ப ஞானமெய்தும்
அண்டபகி ரண்டமெல்லாம் அடியிற்போற்று
மாசையென்ற பலவிதங்க ளெல்லாம்வீழும்
மாறுவித மறியாமல் மாண்டார் சுவாமி
காசையென்றுந் தேடுகிற சண்டாளர்க்குக்
காணாது கெதியில்லை கடினந்தானே.

ஆமப்பா யிதுவல்லோ தீட்சையென்று
அறிவுடைய பெரியோர்க ளறிவிப்பார்கள்
ஓமப்பா மூலமந்தி ரத்தைகேளு
ஒருமொழி யாய்மூலகுரு உபதேசித்தார்.
வேமப்பா ஐயென்று கிலியுமென்று
வீடடைய சவ்வென்றும் மூலமூன்றுஞ்ச்
சாமப்பசஞ்தி தம்பிரார்த்த வகரம்யந்
தலைமாறி ஓலையிலே வரைந்திடாயே.

வரைந்திந்த மூன்றெழுத்து தலைதூக்காக
வால்கடுகு வெந்தயமும் ஓமம்கூட
இரைந்துள்ளிக் காயமுமிவை ஐந்தும்நேராய்
இருசாம மரைத்தந்தத் தகட்டிற்பூசி
நிறைந்தபகை யாரென்று பேருசொல்லி
நிமிஷத்தில் தணல்காட்ட நீறிப்போகும்
பரைந்தபரை சிவனாலும் வெல்லப்போகா
பருத்திதனிற் பொரிபோல பத்துந்தானே.

தானென்ற பொருளைவிஞ்சை யென்றுசொல்வார்
தவமாகு மவமாகும் சராசரங்கள்
தேனென்ற மதுவாகு ஆறுதலங் காணும்
சித்தியுடன் குளிகை நன்றாய் சிக்கிக்கொள்ளும
அரிக்குமுந் தனிதவ்வெழுத் தாம்பின்னும்
அரிக்குள் நின்றதும்ஞ் செழுத்தாம்
தரிக்கு முந்தனதஞ் செழுத்தாம் வாசி
பரிக்குள் நின்றது மஞ்செழுத்தாம்.

ஆதியிலைந் தெழுத்தானால் வாலைப்பெண்
ஐந்தெழுத்து மென்றுபே ரானால்
சாதியி லூமையெழுத் திவள்தானல்ல
ஞானவகை யிவள்தா னானாள்
ஊமையெழுத் தேயுடலாச்சு மற்றும்
ஓமென் றெழுத்தே யுயிராச்சு
ஆமிந்தெழுத் தையறிந்து கொண்டுவிளை
யாடிக் கும்மியடி யுங்கடி.

செகம்படைத்து மஞ்செழுத் தாம்பின்னும்
சிவன் படைத்தது மஞ்செழுத்தாம்
யுகமுடிந்ததும் மஞ்செழுத்தாம் பின்னும்
உற்பவ மானது மஞ்செழுத்தாம்
சாத்திரம் பார்த்தாலுந் தானுமென்ன
வேதந்தானுமே பார்த்திருந் தாலுமென்ன
சூத்திரம் பார்த்தல்ல ஆளவேணுமஞ்சு
சொல்லையறிந் தல்லவோ காணவேணும்.

காணாது கிட்டாது எட்டாது அஞ்சில்
காரியமில்லை யென்றே நினைத்தால்
காணாதுங் காணலாம் வஞ்செழுத்தாலத்தில்
காரியமுண்டு தியானஞ் செய்தால்
ஆயனு மைந்துவெழுத் துக்குள்ளேயறி
வாயனு மைந்து வெழுத்துக் குள்ளேஇந்த
வாலையும் மைந்துவெழுத் துக்குள்ளே
அஞ்செழுத் தானதுமெட்டுந் தாம்பின்னும்.

ஐம்பதோ ரட்சரந் தானாச்சு
நெஞ்செழுத் தாலேநினை யாமலந்த
நிசந்தெரியுமோ வாலைப்பெண்ணே
ஏய்க்கு தேய்க்குதிஞ் செழுத்துவதை
எட்டிப்பிடித் துக்கோளி ரண்டெழுத்தை
நோக்கிக்கொள் வாசியை மேலாகவாசி
நிலையைப் பாரடி வாலைப் பெண்ணே
சிதம்பரச் சக்கரம்தானறி வாரிந்த.

சீமையிலுள்ள பெரியோர்கள்
சிதம்பர சக்கரமென்றா லதற்குள்
தெய்வத்தை யல்லோவறிய வேணும்
ஊத்தை சடலமென் றெண்ணாதேயிது
உப்பிட்ட பாண்டமென் றெண்ணாதே
பார்த்த பேருக்கு ஊத்தையில்லை யிதைப்
பார்த்துக்கோ வுந்தனுட லுக்குள்ளே
அத்தியிலே காம்பத்தியிலே மன.

புத்தியிலே நடு மத்தியிலே
நெற்றிசதா சிவமென்று சொன்னேனுந்தன்
நிலைமையைப் பாரடிவாலைப் பெண்ணே
அழுத்திலே சொல்லஞ்ச்செழுத் திலேநானு
வழுத்தினேன் ஞானம் பழத்திலே
கழுத்திலே மயேஸ்வரனு முண்டு
கண்டுபாரடி வாலைப் பெண்ணே
அஞ்சிலே பிஞ்சிலே வஞ்சியரேநிதம்.

கொஞ்சி விளையாடு வஞ்சியரே
நெஞ்சிலே ருத்திரன் சூழிருப்பான்
நேருடனாமடி வாலைப் பெண்ணே
தொந்தியிலே நடுப்பந்தியிலே திடச்
சிந்தையிலே முந்தியுந்த னுடன்
உந்தியில் விஷ்ணுவுந் தானிருப்பாரிதை
உண்மையாய்ப் பாரடி வாலைப் பெண்ணே
ஆலத்திலே யிந்தஞாலத் திலேவருங்.

காலத்திலே யனுகூலத் திலே
மூலத்திலே பிரமனுந்தா னிருந்துவாசி
முடுக்கிறான் பிண்டம் பிடிக்கிறான்
தேருண்டு அஞ்சுரு ஆணியுண்டு அதில்
தேவருண்டு சங்கீதமுண்டு
ஆருண்டு பாரடி வாலைப்பெண்ணே
ஒன்பதுவாசல் கோட்டை யுண்டுஅதில்
உள்ளே நிலைக்கார ரஞ்சுபேராம்.

அன்புடனே பரிகாரர்க ளாறுபேர்
அடக்கந் தானடி வாலைப் பெண்ணே
இந்தவிதத்திலே தேகத்திலே தெய்வம்
இருக்கையில் புத்திக்கறிக் கையினால்
சந்தோஷ வாலையைப் பாராமல் மனிதர்
சாகிறதேதடி வாலைப் பெண்ணே
நகார திஷ்டிப்பு ஆனதி னால்இடு
வான வகார நயமாச்சி.

உகார முச்சிசிர சாச்சியிதை
உற்றுப்பாரடி வாலைப் பெண்ணே
வகாரமானது ஓசையாச்சு அந்த
மகாரமானது கெர்ப்ப மாச்சு
சிகாரமானது மாய்கை யாச்சுஇதை
தெளிந்து பாரடி வாலைப் பெண்ணே
ஓமென்ற வட்சரந்தா முண்டதற்கு
ஊமை யெழுத்து மிருக்குதடி
நாமிந்தெழுத்தை யறிந்து கொண்டோம்
விளையாடிப்பாரடி வாலைப் பெண்ணே.

**போகர் அருளிய வாலை ஞான பூஜாவிதி முற்றியது.**